கந்தர்வ ராஜ ஸ்ரீ புஷ்ப தந்த மஹாகவி அருளிய

# சிவ மகிமைத் துதி

(வடமொழி மூலமும் தென்மொழி ஆக்கமும்)

தமிழில்
திருவையாறு வே. இரமணன்

வெளியிடுவோர்
**சிவநெறிக் கழகம்**
பிள்ளையார்பட்டி – 630 207
தமிழ்நாடு, இந்தியா



உ

## விகாஸ் ரத்னா சிவஶ்ரீ K. பிச்சைக் குருக்கள்

முதன்மை அர்ச்சகர், ஶ்ரீ கற்பக விநாயகர் திருக்கோயில்,
முதல்வர், கற்பக விநாயகர் வேத ஆகம வித்யாலயம்
ஸ்தாபகர், சிவநெறிக் கழகம்
செயலாளர், கற்பக விநாயகர் பள்ளி
பிள்ளையார்பட்டி-630 207, சிவகங்கை மாவட்டம், தமிழ்நாடு, இந்தியா.

# வாழ்த்துரை

சிவகங்கை மாவட்டத்தில் மிகவும் சிறப்புடைய திருத்தலம் கண்டதேவி. வடமொழியிலும், செந்தமிழிலும் பல நூல்கள் இத்திருத்தலத்தைப் போற்றி பேரறிஞர்களால் வெளியிடப்பெற்றுள்ளது. சிவஶ்ரீ. சந்திரசேகரக் குருக்கள் இத்திருத்தலத்தில் ஸ்தானீக அர்ச்சகர். சிங்கப்பூரிலும், கோலாலம்பூரிலும் அர்ச்சகராக திருக்கோயில் பணியுடன் ஜோதிடக் கலையிலும் வல்லவராகத் திகழ்பவர். சதாபிஷேகம் செய்து கொண்டவர். இவரது புதல்வர் சிவஶ்ரீ காளிதாஸ்–திருமதி.சுகுணவல்லி தம்பதியினரின் மணிவிழா 02.03.2021-ல் பிள்ளையார்பட்டி திருத்தலத்தில் உற்றார் உறவினர்களுடன் நடைபெறுவது மகிழ்வைத் தருகிறது. சிவநெறிக் கழகம் தொடங்கிய நாள் முதல் இன்று வரை அனைத்து வளர்ச்சிகளுக்கும் எங்களோடு இணைந்து செயலாற்றுபவர். நாட்டார்கள், நகரத்தார்களுடன் இனிமையாகப் பழகுபவர். மணிவிழா நினைவாக சிவமகிமா ஸ்தோத்திரம் சிவபக்தியில் சிறந்த ‘சேக்கிழார் சீர்பரவுவார்’ திருவையாறு சாம்பவஶ்ரீ இரமணன் அண்ணா அவர்கள் இந்த ஸ்லோகங்களை தமிழில் மொழி பெயர்த்து வழங்கி உள்ளார்கள். திருப்பரங்குன்றம் ஸ்கந்தகுரு வித்யாலயத்தின் துணைப் பேராசிரியர் சிவஶ்ரீ கார்த்திகேய சிவம் இந்நூல் வெளிவருவதற்கு பேருதவி புரிந்துள்ளார். இந்நூல் வெளிவருவதற்கு காரணமான



அனைவருக்கும் சிவநெறிக் கழகத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவநெறிக் கழக ஸ்தாபகர்

**K. பிச்சைக் குருக்கள்**

பிள்ளையார்பட்டி

27.02.2021

சிவநெறிக் கழகத் தலைவர்
சிவஶ்ரீ. **வைரவக் குருக்கள்**

சிவநெறிக் கழகத் துணைத்தலைவர்
**M. சோமசுந்தரக் குருக்கள்**

மற்றும் சிவநெறிக் கழகத்தார்கள்





உ

ஸ்ரீ குருப்யோ நம:

# முன்னுரை

நாஹம் வெஜ்ஜி க்ஷூவாஸிஙோஃ வுஸாஉாஜ் மதிஉநூயா।
வூயெவொவாயஜாவஜு தஸூாஜூக்ஷிம் வூணெநிஶ॥



சிவபெருமானின் மஹிமைகளைச் சொல்லித் துதிக்கும் 32 ச்லோகங்களையும் 11 பலச்ருதிகளையும் கொண்ட ஒரு உத்தமமான ஸ்தோத்ர நூல் ‘சிவமஹிம்ன–ஸ்தோத்ரம்’. இது அடிக்கு 17 எழுத்துக்களைக் கொண்ட ‘சிகரிணீ’ என்ற சந்தஸ்ஸில் இயற்றப்பட்டுள்ளது. இது இந்திரனின் சபையில் இசைக்கலைஞராக விளங்கிய புஷ்பதந்தர் என்ற கந்தர்வகணத்தைச் சார்ந்தவரால் இயற்றப்பட்டது.

புஷ்பதந்தர் என்றால் மலர்களைப் போன்ற அழகிய பல் வரிசை கொண்டவர் என்பது பொருள்.

சிவபக்தியிற் சிறந்த புஷ்பதந்தர் அழகிய மலர்களைக் கண்டால் மகிழ்ந்து உடனே அவற்றைச் சிவனுக்கு அர்ப்பணிக்க முயல்பவர். இவர் திருக்கையிலையில் சிவபெருமான் உமாதேவியார் நந்தியெம்பெருமான் மற்றும் பரிவாரங்களோடு அமர்ந்திருக்கையில் கையில் புஷ்பங்களுடன் சிவனருகில் நின்று பூஜித்து மகிழ்வாராம்.

அவரது சரித்ரம் பின்வருமாறு: புஷ்பதந்தர் ஒரு முறை ஆகாயமார்க்கமாக பயணிக்கையில், பூலோகத்தில் சிறந்த சிவபக்தனும் சிவபூஜைக்காகவே நந்தவனம் அமைத்து அனுதினமும் பூஜிப்பவனுமாகிய சித்ரரதன் என்ற அரசனின் அரண்மனைத் தோட்டத்தில் சிவபூஜைக்கு ஏற்ற அழகிய புஷ்பங்கள் இருப்பதைக் கண்டு வியந்து அதில் மனதைப் பறிகொடுத்தார்.

மலர்களின் அழகில் மெய்மறந்து தன்னைக் கட்டுப்படுத்திக்



கொள்ள இயலாமல், அப்பூக்களை பிறர் பொருளை அவரறியாமல் அபகரிக்கும் குற்ற உணர்வு இருந்தும் சிவபெருமானுக்குச் சமர்ப்பிக்கும் ஆர்வத்தில் பறித்து விட்டார்.

இது தினமும் தொடரவே, அரசனுடைய சிவபூஜைக்குப் பூக்கள் குறைந்தன. இதையறிந்த அரசன் காவலைப் பலப்படுத்தினான்.

தெய்வீகசக்தி கொண்ட புஷ்பதந்தர் காவலர்கள் கண்ணுக்குத் தென்படாமல், இருள் விலகுமுன் வந்து பூக்களைப் பறித்து பூஜை செய்து வந்தார். தெய்வ வழிபாட்டிற்கென்றே தான் வளர்த்து வரும் பூந்தோட்டத்தல் மாயத்திருடன் யாரோ நுழைந்து பூக்கொய்து செல்வதை அறிந்த அரசன், அதைக் கண்டுபிடிக்க எண்ணி சிவநிர்மால்யங்களைத் தோட்டத்தில் தூவச் செய்தான்.

புஷ்பதந்தர் இதை அறியாமல் நிர்மால்யத்தின் மேல் கால் வைத்து மிதித்ததால் பெருமானின் கோபத்திற்கு ஆளாகித் தன் தெய்வீக சக்திகளை இழந்தார். ஆனால் பெருமான் அருளால் நடந்ததை அறிந்து கொண்டார்.

“சிவாபசாரம் செய்த காரணத்தால் என் இயல்பான தெய்வீக சக்திகளை இழந்து விட்டேன். இனி எவ்வாறு கந்தர்வ உலகம் திரும்பிச் செல்வேன்? என் தெய்வமான பரமேச்வரனைக் கண்டு வணங்குவது எங்ஙனம்?” என்று கலங்கினார்.

**சிவமஹிம்ன - ஸ்தோத்திரத் தோற்றம்:**

தன் தவற்றை உணர்ந்து மன்னிப்பு வேண்டி இறைவனை நெக்குருகப் பிரார்த்தித்தார். வெகுதூரம் விலகிச் சென்று ஒரு நதிக்கரையில் அமர்ந்து பெருமானைத் தியானித்தார். அப்போது அவர் பாடிய துதிப்பாடலே சிவமஹிம்ன: ஸ்தோத்திரமாக புகழ்பெற்று விளங்குகிறது. இறைவன் அவர் பாடலில் மகிழ்ந்து மன்னித்து அவருடைய தெய்வீக சக்திகளை மீண்டும் அளித்தார். அந்த ஸ்தோத்ரம் இவ்வாறு தொடங்குகிறது:




ஃஹிந்ஃ வாஶம் தெ வாஶவிஜுஷொ யஜுூஸஜூஶ்
ஸ்துதி ஸ்யுூஹாஶீநாஂ கூவி தஜவஸணாஸ்யி மிஶஃ ।
கூயாவாஷுஃ ஸவூஃ ஸ்ஶதிவாிணாஶாவயி ஹுணாநு
ஶாவொஹஷ ஷொகெ ஹஶ நிஶவாஜஃ வாிகூஶஃ ॥ க॥

பெரும்புகழ் பெற்றதும் அனைவராலும் எடுத்தாளப்படுவதுமான ஒரு ச்லோகம் இந்த ஸ்தோத்ரத்தின் 32வது ச்லோகம் அது:-

கூஸித-மிாி-ஸஶம் ஸுாகூ கூஜ்ஜஶம், ஸிஙு-வாகெ,
ஸுஶ-தஶுவஶ-ஶாவா ஶெவநீ, வகுஶுவீூ ।
ஶிவதி யஜி ஹுஹீகூா ஶாஶஜா ஸவூகூாஶம்,
தஜவி தவ ஶுணாநாஂ ஶஶ வாஶம் ந யாதி ॥ நஉ॥

இதன் பொருள்: ‘நீலமலையையே எழுதும் மையாக்கி, சமுத்திரத்தையே மைக் குப்பியாக்கி, கற்பகவிருக்ஷத்தின் கிளையையே எழுதுகோலாக்கி, விரிந்து பரந்த பூமியையே எழுது பலகையாக்கி, அறிவுத் தெய்வமான ஸரஸ்வதிதேவியே பல காலம் எழுதினாலும் உன் மஹிமையை முழுவதும் அளவிட இயலாது’ என்பதாகும்.

**ஸ்ரீ நந்திகேச்வரரை எதிர்கொள்ளல்:**

இத்தோத்திரம் பாடி இறைவனை மகிழ்வித்த புஷ்பதந்தர் (சிறிது கர்வத்துடன்) கைலாயம் சென்று இறைவன் முன் இப்பாடல்களைப் பாட விருப்பம் கொண்டார். ஸ்ரீ நந்திகேச்வரர் புஷ்பதந்தரை கைலாயவாயிலில் எதிர்கொண்டு அவரிடம் தன் வாய் திறந்து 32 பற்களையும் காட்டினார்.

தாம் பாடிய 32 ச்லோகங்களும் அவற்றில் இருப்பதைக் கண்ட புஷ்பதந்தர் வியந்து, ‘நந்தியெம்பெருமானே! இது என்ன அதிசயம்? எப்படி சாத்தியம்?’ என வினவினார்.

‘இதில் வியப்பு என்ன உள்ளது? எனக்கே நீர் பாடிய ஸ்தோத்திரங்கள் தெரிந்திருக்கும் போது இறைவனுக்குத் தெரியாதா?’ என்று கேட்டார் நந்தி.

அதைக்கேட்ட புஷ்பதந்தருடைய “நான் பாடினேன்” என்ற கர்வம் அழிந்தது. அவனருளால் அவனைத் துதித்து அவனருள் பெற்றேன் என்று கூறிப் பணிவோடு வணங்கிச் சென்றார் என்பது இந்நூல் வரலாறு.

**ஸ்ரீ ராமக்ருஷ்ணரும் சிவமஹிம்ன ஸ்தோத்திரமும்:**

இப்பாடலை விவேகானந்தர் பாடிக் கேட்கையில் ஒன்றிரண்டு பாடல்களிலேயே சமாதி நிலையை அடைந்து விடுவாராம் ஸ்ரீ ராமக்ருஷ்ண பரமஹம்சர்.

ஸ்வாமி விவேகானந்தர் சிகாகோ ஸர்வமதமஹா சபையில் சிவமஹிம்ன ஸ்தோத்திரத்தின் ஏழாவது ச்லோகத்தை எடுத்துக் காட்டி கருத்தை நிலை நாட்டினாராம்.

குயீ ஸாஜ்ஷ்ம் யொமஃ வபாுவதிஊதம் வெஷ்ணவஊிதி
வ்ரஹிளெ வ்ரஸ்தாநெ வாஈஊஉஊ: வயூ்ஂ ஐதி வ ।
ரூசீநாம் வெசிகூ்ாஃ் ஜுஜு-கூடிய நாநாவய-ஜுஷாம்
நூணாீ ஊகொ மஜூஸ்ஹஊஹி வயஹாீ கூணவ ஐவ ॥

சிவமஹிம்ன ஸோத்திர பாராயணமானது ஜபம், தானம், தவம், தீர்த்தயாத்திரைகளை விட உயர்ந்ததாகக் கருதப்படுகிறது. இப்பாடல்களைப் பக்தி சிரத்தையுடன் படிப்போர் இக–பர–சுகங்களை அடைந்தே தீருவர்.

அற்புதமான இந்தப் பக்திப் பனுவலை அழகு தமிழில் செய்யுளாக்கியிருக்கிறார் நமது பேரன்பிற்கும், பெருமதிப்பிற்குமுரிய சேக்கிழார் சீர் பரவுவார் திருவையாறு சாம்பவஸ்ரீ இரமணன் அண்ணா அவர்கள். சிவபக்தியிற் சிறந்த சான்றோராகிய அண்ணா




அவர்களின் மொழிபெயர்ப்பு இனிமையாகவும் அதே சமயத்தில் மூலநூலின் அமைப்பை அப்படியே மொழிவதாகவும் அமைந்திருப்பது புஷ்பதந்தரே உள்நின்று உணர்த்தியிருக்கிறார் என்று எண்ணும் அளவுக்கு அமைந்துள்ளது.

சமயத்துறையில் போலிகள் மலிந்துவிட்ட இக்காலத்தில் சமயநூல்களின் உண்மையை உள்ளவாறு உணர்ந்துகொள்ள ரமணன் அண்ணா நமக்குக் கிடைத்திருக்கின்ற ஒரு வைதிக சைவக் கருவூலம். இதுபோன்ற இன்னும் பலப்பல அருட்பணிகளை அவர் மூலம் நாம் செய்வதற்குப் பெருமான் கருணை புரிய வேண்டும்.

அற்புதமான இந்த நூலை க்ரந்தம், தேவநாகரீ ஆகிய எழுத்துக்களில், ரமணன் அண்ணா அவர்களின் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்போடு வெளியிடுவது நம் மாணவர்கள் நூலைப் பொருளுணர்ந்து ஓதுவதற்கு ஏதுவாக அமையும் என்பதில் ஐயமில்லை.

வெளியீட்டுப் பணியில் எனக்கும் ஒரு பங்கை நல்கி ஆசி வழங்கிய பிள்ளையார்பட்டி சிவஸ்ரீ அண்ணா அவர்களுக்கு எனது ஸாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

பேரன்புடன்<br>
சிவசரணகமலைக சரண்யன்<br>
**க. கார்த்திகேய சிவம்**<br>
திருப்பரங்குன்றம்



# பதிப்புரை

பரம்பொருளாகிய சிவபெருமானைக் குறித்துத் தோத்திர வகையிலும், சாத்திர வகையிலும், வேத, ஆகம, புராணங்களாகின்ற பிரமாண நூல்களின் அடிப்படையில், தமிழிலும், வடமொழியிலும் எழுந்த நூல்கள் எண்ணில்லாதனவாகும். இவற்றுள் ஒருசில நூல்கள் தோத்திர வடிவத்தில் அமைந்தபடியே சாத்திர உண்மைகளையும் நுண்மைகளையும் எடுத்துரைக்கும் சதுரப்பாடு கொண்டவை. இவற்றுள்ளும் தொன்றுதொட்டு அறிஞர்களால் தலைமைப்பாடு கொண்டதாகப் போற்றப்படுவது தற்போது தங்கள் கையில் திகழும் ‘சிவ மகிமைத் துதி’ ஆகும்.

சாதுக்களுக்கு அவசியம் மனப்பாடமாக இருப்பதும், வடநாட்டுச் சிவாலயங்கள் அனைத்திலும் காலை, மாலை இருவேளைகளிலும் ஆரத்தி தரிசனத்தின் போது பக்தர்களால் சேர்ந்து பாடப்படுவதும் ஆகிய மரபுகள் வடமொழிச் சிவ மகிம்நஸ் ஸ்தோத்திரத்தின் சிறப்பினைப் பறைசாற்றும்.

இந்நூலின் ஆசிரியர் ஸ்ரீ புஷ்பதந்தர். இவர் கயிலையில் பெருமானுக்குத் தொண்டாற்றிக் கொண்டிருந்த ஒரு கந்தருவர். அறியாமல் சிவ நிர்மால்ய மலர்களைத் தாண்டிச் சென்ற அபராதத்தால் தன்னுடைய அமானுஷ்ய சக்திகளை இழந்தார். எம்பெருமானை இத்துதியால் பரவிய பின்னர், மீளவும் சிவப்ரீதியை எய்திக் கந்தர்வர் ஆனார். இச்சரிதத்தை 37ஆவது பாடல் குறிப்பால் உணர்த்துகிறது.

இவரே எண்திசை யானைகளில் ஒன்றான ஸ்ரீ புஷ்பந்தரும் ஆவார். ஸ்ரீ சொக்கநாதப் பெருமானின் கருவறை விமானத்தைத் தாங்குபவராகத் திருஆலவாய்க் கோயிலில் காட்டப்பட்டுள்ளார்.





வெள்ளை யானை உருவத்துடன் திருவானைக்காவில் ஸ்ரீ ஜம்புநாதப் பெருமானைக் காவிரி நீரால் அபிஷேகித்து வழிபட்டவரும் இவரே ஆவர்.

பாரத தேசம் நெடுகிலும் ஆங்காங்கே 'ஸ்ரீ புஷ்ப தந்தரால் வழிபடப்பட்ட பெருமான்' என்று பல சிவலிங்கத் திருமேனிகள் காணப்படுகின்றன. இவரது 'சிவ மகிம்நஸ் ஸ்தோத்ரம்' மத்திய பிரதேசத்தில் கல்வெட்டாகக் கண்டெடுக்கப்பட்டுள்ளது. சிவ ரகசியம் என்ற பெரிய இதிகாசத்தில் இத்தோத்திரம் சேர்க்கப்பட்டுப் படிக்கப்பட்டு வருகின்றது. காசியில் ஸ்ரீ விசுவநாதப் பெருமான் திருக்கோயில் பிராகாரச் சுற்றில் பளிங்குக் கற்களில் இது பதிவு செய்யப்பட்டுள்ளது.

இந்நூல் வடமொழியில் ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி ஸ்வாமிகளால் பாஷியம் வரையப்பட்டுள்ளது. பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணத்துத் திருமணப் படலத்தில் இந்நூலைப் பற்றிய குறிப்பும், ஆசிரியர் ஸ்ரீ புஷ்பதந்தரின் அணுக்கத் தொண்டின் பெருமையும் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதனால் தமிழ்கூறும் நல் உலகத்துச் சைவச் சான்றோர்களாலும் இந்நூல் நன்கு அறியப்பட்டும் போற்றப்பட்டும் வந்துள்ளமை தெரிகிறது.

தற்சமயம் தமிழ்ச் சைவ உலகம் இந்நூலினை மீள நினைவுபடுத்திக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளது.

இந்நூல் பல பத்தாண்டுகளுக்கு முன் வடமொழி மூலம் மற்றும் தமிழ்ப் பொழிப்புரையுடன் வெளிவந்தது. பின் அருகிவிட்டது. சில ஆண்டுகளுக்கு முன் இறையருளால் தமிழ்க்கடல் திருவையாறு வே. கோபால அய்யரின் மாணவர் திருவையாறு வே. இரமணன் அவர்களால் தமிழ்ச் செய்யுள் வடிவில் மொழிபெயர்க்கப்பட்டு அவ்வாசிரியர் பெருமானால் 'நல்ல மொழிபெயர்ப்புப் பாடல்' எனப் பாராட்டவும் பெற்றது.

பிள்ளையார்பட்டி ஸ்ரீ அண்ணா அவர்களின் ஆசிகளுடன் அவர்தம் மேலான வழிகாட்டுதலின்படி இயங்கிவரும் நம் 'உலக



இந்து சமய ஆன்மீக கலாசார மையத்தின்' 100ஆவது இணையதள வகுப்பு நிகழும் இச்சமயத்தில், மையத்தின் இணையதளத்தின் மூலம் நிகழும் கலை மற்றும் சமயப் பணிகளைச் சிறப்பாக நினைவுகூரும் முகமாக இவ் அரிய நூல் வெளியிடப்படுகிறது. உலகளாவிய பெரும்புகழ் ஈட்டிய வடமொழித் தோத்திர நூலான இந்நூல் **முதன் முறையாகத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு**, அம்மொழி பெயர்ப்பு முதன்முறையாக நமது மையத்தின் மூலம் வெளியிடப்படுவது மையத்தின் மகுடத்தில் இழைக்கப்படும் இன்னொரு மணியாகும்.

உ

கந்தர்வ ராஜ ஸ்ரீ புஷ்பதந்த மஹாகவி இயற்றியருளிய

# சிவ மகிமைத் துதி

(தமிழில் – வே. இரமணன்)

பெற்றி நன்(று) அறியார் நின் நேர்ப்
பெருமையைப் பேசல் ஆகா(து)
உற்(று)எனில் அயனும் ஒட்டான்;
அவன் உரை ஒவ்வா(து) ஆகும்;
மற்(று) அவர் அவர் மதிக்கே
மருவிய வகையால் போற்ற
உற்றிடும் எனில் இவ் ஏழை
உழைப்பில் என் குற்றம் சாற்ற? 1

மன(ம்) மொழி மறுக்கும் நின்தன்
மகிமையை மறையும் அஞ்சி
இன(ம்) மொழி இகந்தே 'அன்(று) அன்(று)
இது' என இயம்பக் கேட்டும்
புனை மொழி யவர் ஆர்? ஆர்க்கே
புலப் பொருள்? எனினும் தஞ்சம்,
நின(து) உரு மயக்கில் சொல்லோ(டு)
எய்திலர் யாரே, நெஞ்சம்? 2

இன்புகொப் பளிக்கும் ஒப்(பு)இல்
அமுத வே(து) ஆக மங்கள்
முன்புகொப் பளிக்கும் முன்னோய்!
முயன்றுநின்(று) அமரர் ஆசான்




வம்புகொப் பளிப்பா னேனும்
வழக்கிலது) ஏற்றல்; வாக்கின்
அன்பு கொப் பளித்தேன் அல்லல்
அருங் குணத்(து) அகற்றும் நோக்கின். 3

முக் குணப் பகுப்பால் மூண்ட
மூவகை உருவம் தாங்கித்
தக்கவைத்(து) அழித்துத் தோற்றித்
தருவைநீ அனைத்தும் என்றே
முக் கண மறை மொழிந்தும்
மூடர் சில்லோர் மறுத்தல்
துக்கம்,நல் தூயோர்க்(கு); இன்பாம்,
தொண்டுபட்(டு) அறியார்க்(கு) என்பாம். 4

கருதிஎன்? கரணம், காயம்,
கருவி யா? பற்(று) என்? எந்தப்
பொருளினைப் புவனம் மூன்றாப்
புதுக்கினன்? என்(று)என்(று) இங்ஙன்
கருத (அ)ரி(து) ஆகும் தெய்வக்
கழல் திரு மாட்டுக் கானல்
பொரு திரைத் தருக்கி வீங்கும்
புல்லரால் புவனி ஏங்கும். 5

உறுப்(பு) உறு உலகம் தாமே
உள எனல் உண்டோ? எல்லாம்
நிறுத்திடத், தோற்றி, வாங்க
நிலைக் களன் வேண்டி லானோ?



பிறப்(பு) இலா ஈசற்(கு) அல்லால்
பிறற்(கு) இது முயற்சி ஆமோ?
அறச் சிறி(து) அறிவும் அற்றார்
அமரனை ஐயம் உற்றார். 6

முதம் செறி வேதம், முன்பில்
வைணவ சாங்கி யங்கள்,
பதஞ்சலி யோகம், நல்ல
பாசுபதம் எனப் பல் பல்
விதம் பொலி சமயம் தத்தம்
விருப்பினால் உறினும், ஆறு
சதம் கடல் அடைதல் நேர்வார் –
சங்கரன் தாளே சார்வார்! 7

புருவ மெல் அசைவில் புத்தேள்
உலகவர் பூதி எல்லாம்
வரம் அருள் வள்ளால்! நின்பால்
மால் விடை, கட்டு வாங்கம்
அர(வு), அதள், மழு, வெண் ணீறு,
தலை அ(ல்)லால் கருவி யாதே?
பொருள் உருப் பேய்த்தேர் ஆன்ம
போதரைப் புரட்டி டாதே! 8

இரட்டுதல் வாயால், வீரம்! –
எவர்க்கும் இங்(கு) எனக்கும் ஆமே!
பொருட்டென்றும், பொருட்டன்(று) என்றும்,
இரண்டென்றும் உலகைப் போற்றித்



தெருட்டுவார் மருட்டப் போலும்
　　திருவடி புனைந்தேன் ஒல்லை!
குருட்டு நான் நாண் இலேனால் –
　　குறை மதிக்(கு) அச்சம் இல்லை! 9

எரித் தம்பத் திருஆர் மேனி
　　இருவர் கீழ் மேலாய் ஏங்க
வருத்தியது) அகந்தை வாளா;
　　மாண்டவர் மீண்டும் வேண்டித்
திருத்திய சிந்தை, காதல் சிரத்தை
　　கொண்(டு) உய்ப்பத், தாமே
உருத் தெரிந் தருளும்; உன் சீர்ப்
　　பூசனை மோசம் போமே? 10

எளிதில்மூ உலகம் எங்கும்
　　எதிர்ப்பவர் இன்றி வென்றும்
களிதிறம் பாத நெஞ்சும்,
　　கல் புயம் அதனில் தீராத்
துளியும் போர்த் தினவும் கொண்டே
　　துள்ளுமேல் ஒருவன், நின்தாள்
ஒளி மலர்க்(கு) உதவும் பத்தித்
　　தலை மலர் உறைப்பாம் உத்தி! 11

ஆன கல் அரக்கன், தொண்டின்
　　அடை வலிச் செறிவைத் திண்தோள்
கானகம் கொண்(டு) உன் கோயில்
　　கயிலை பால் காட்டக், காலின்




பூநக நுனி போக் கிட்டாய்,
        புகல் அதத் தினும் இல் வண்ணம்!
ஊன் அகக் கயவர் வாழ்வில்
        உயர்ந்துழி மயங்கல் திண்ணம். 12

உலகம் மூன்(று) அடிமை கொண்டான்,
        உன் அடிக்(கு) அடிமை பூண்டான்
பலி மகன் பாணன் என்பான்
        பரிகசித்(து) ஒதுக்க ஓங்கும்
அல(கு) இலாச் செல்வம் அன்றோ
        சதமகன் ஆள்வ(து)? உன்னை
வலம் உற வணங்க வாரா
        வரிசை என் சிரத்தால், பின்னை? 13

மூலமாய் அண்டம் பொன்ற
        முளை பயம், அசுரர் தேவர்க்(கு)
ஆலமாய், மிடற்று நின்பால்
        அபயமாய், அமுதாய்க் கோல
நீல மா மணியாய், மாமை
        நிகழ்த்திடா(து) இல்லை நின்றே!
ஞால நோய் தீர நோற்றார்
        நலக்குறை மெச்சும் ஒன்றே. 14

தேவரில் ஒருவன் என்ற
        சிந்தையால் சிந்தை மட்டில்
மே(வு)உரு ஆனான் அச்சோ,
        மேதினி விண்ணும் எங்கும்




தா அரும் பகழி மாரன்!
தமை உடைத் தவத்தோர்க்(கு) ஆற்றும்
தீ வரும் அவமானம் தான்
செல் கதிச் செற்(று)ஏ மாற்றும். 15

மறித்(து) அடி பெயர்க்க மண் மா(து)
ஐயுறும்; திண் தோள் மண்டி
நெருக்குறு கோள்க ளாலே
விண்டுவின் பதம் நின் றேங்கும்;
விரித்த செஞ் சடைகள் வீசி
விண் மருங்(கு) எங்கும் தாக்கும்;
அருத்துவான் நடித்தி ஐய!
ஆற்றல் ஆர் ஆற்றப் போக்கும்? 16

வெண் நுரை விண் மீன் மின்னி
விண் விளை யாடும் கங்கைப்
பெண் அரைத் துளியாய்ப் பெய்தாய்,
பெரும் சடைக்(கு), அவளே பேர்த்தும்
மண் விரைந்(து) அல(கு) இல் தீவாய்
மலிந்திட வளைக்கும் ஆகில்
அண்ணல்! நின் மேனி வண்ணம்
அளப்பரி(து) எனல் என், ஏகில்? 17

புல் புரை புரம் தீ மூட்டப்
புன்னகை அதிகம் ஆக
வில்,கணை, இரதம், ஓட்டி
மேரு, மால், பூ,க ஆக

பல் பல கருவி பக்கல்
 பரித்த(து)ஓர் பரிவின் ஆடல்!
தற்பரத் தலைவர் ஏனோர்
 தம் திறச் சார்(வு) என் கூடல்? 18

பழிப்(பு) இல் நல் பத்தின் பத்துப்
 பத்துப் பத்துமத்தின் பத்தால்
தொழத் திரு மாலார் பாதம்
 துணிந்த நாள் தோன்றா ஒன்றை
விழித் திரு மலர் நேர் ஆக்கும்
 விழுமிய உழுவல் அன்பே
விழித்(து) உரு திகிரியா மூ
 வியன் பொழில் புரக்கும் முன்பே! 19

வினை உறங்கிய பின் நீயே
 விழித்துளாய் பயன் துய்ப்பிப்பான்;
நினை நினைந்(து) அல்லால் நீத்த
 வினை பயன் தருமே, செத்தும்?
உனை உணர்ந்(து) இங்ஙன், கேட்ட
 உரைமொழி உறுதி உன்னி
வினை புரிந்(து) உலகம் உய்யும்
 'விருப்பு நிற்(கு)' எனவே மன்னி. 20

தரி உடல் உயிர்கட்(கு) எல்லாம்
 தலைவனே தக்க தக்கன்;
இருடிகள் குருக்களா நல்
 இமையவர் அமர யாத்தும்



புரி மகப் பயனை ஊட்டும்
பொறை உடை நீயே மாய்த்தல்
வரும் எனில் அன்பின் வாரா
வழி,வரும் அல்லல் தீரா! 21

பிணை உருப் பெண்ணைப் பெற்ற
பிரமனே கலையாய்க் காம
அணை துறந்து அணைய, வெள்கும்
அமரர் முன் அமர் வில் வாங்கிக்
கணை தொடுத்து ஓடுவித்த
கடும்சினம் குன்றாது இன்றும்;
இணை இலோய்! இயங்கும் அன்னோன்
இயற்றின அச்சத்து என்றும்! 22

காய்ந்தவா இறையில் கண் முன்
காமப் புல் சிலையும் கையும்;
ஏய்ந்தவா அறிந்தும்,எய்தும்
இரும் தவத்து ஈசன் பாதி;
மாந் தளிர் வனப்பின், மாதர்
மயக்கின் என்று எண்ணாள்; எண்ணில்–
ஏந்து இளம் கொங்கைச் செவ்வாய்
ஏழையர் போலும் மண்ணில். 23

எரி வனத்து ஆடல்; பேய்கள்
இனம் துணை; எரிந்தார் சாம்பல்
புரி வனப் பூச்சு; வீந்தார்
புன் தலை மாலை – என்று




தெரிவன எல்லாம் நின்பால்
அமங்கலம் திகழ்க சீலம்!
மருவில் நின் பெயரும் மேலாம்
மங்கலம் நிகழ்த்து மூலம்! 24

உள் உணர்(வு) உள்ளம் நோக்க,
ஒடுக்கியே நூலின் காலை,
துள்ளும் மெய் புளகித்(து) இன்பம்
துளித்த கண் களித்த வேலை,
கள் அலை மடுவில் போலும்
காட்சியின் மிக்கார் மூழ்க
அள்ளூறும் அகத்த(து) ஏதோ
உண்மை, அஃ(து) அடிகள் மாதோ! 25

அருக்கன் நீ! அலவன் நீ! வான்,
அனிலன் நீ! அனலன் நீ! நீர்
உருக்கம் நீ! மண் நீ! நீயே
உயிர் என்றென்(று) இங்ஙன் உன்னைப்
பரிச்சின்னம் ஆகப் பார்த்தார்
பண்டிதர்; பகரில் நன்றே
கருத்துறக் காணேம் இங்கே
யாது நீ அல்லை ஒன்றே! 26

மும் மறை; அவத்தை மூன்று,
மூ உல(கு), அமரர் மூவர்,
அம் முதல் எழுத்து மூன்றால்
வேறு வே(று) ஆத ரிக்கும்



தம்மையே தாரம்; தூய
    தாமேயாய்க் கடந்த மேலாம்
செம்மைநல் சிவமே நாதச்
    சேர்க்கையால் குறிக்கும் நாலாம். 27

பவன், உருத்திரன், ஈசானன்,
    பசுபதி, சருவன், பீமன்
சிவ! மகாதேவப் பேரோ(டு),
    உக்கிரன் ஆம் இவ் எட்டும்
தவ மறை தனித் தனித் தேர்ந்(து)
    ஆய்ந்த நல் தனிச் சிறப்பால்
உவகை கூர் ஒளியாய்! அன்பே!
    உனக்(கு) அலால் வணக்கம் துன்பே! 28

அண்மையாய் உயிர்க்கு! சேயாய்
    ஐவருக்(கு)! அறிவைக் கூர்த்(து)ஓர்
நுண்மையாய்! நோக்கத் தப்பாப்
    பருமையாய்! நொடியா மூத்த
உண்மையாய்! உருவால் மூவா
    இளமையாய்! உள எல்லாம் ஆம்
திண்மையாய்! போற்ற நேர்ந்தாய்,
    தேறலாய் எல்லாம் தீர்ந்தாய்! 29

படைத்திடும் பவனே போற்றி
    பார்,துகள் பான்மை தாங்கி!
துடைத்தழி அரனே போற்றி
    துண்இருள் குணமே தூங்கி!

அடைத்தருள் மிருடா போற்றி
அவனி, சத்துவத்தின் ஓங்கி!
நடித்தொளிர் சிவனே போற்றி
குணம்குறி நயவா நீங்கி! 30

முற்றிலாது) அல்லல் முற்றி
முட்டும்என் சிந்தை எங்கே,
வற்றிலாது) எல்லை வற்றும்
வள்ளல் வான் செல்வம் எங்கே?
குற்றம்இல் குணமே! இங்ஙன்
குன்றினேன் நடுக்கம் குன்றச்
சொற்ற சொல் மாலை, காதல்
துரப்ப நான் துணிந்தது) ஆதல்! 31

கரிய மால் வரையே – மையா,
கடல் – கரை கலனா, கற்பத்
தருக் கரம் – கோலா, ஓலை –
தரணியா, தெய்வ வாக்கிற்(கு)
உரியவள் தானே ஓவா(து)
எழுதினும் உலத்தல் இல்லை,
பெரிய எம் பெருமான்! பேசப்
பெரிய நின் குணத்தின் எல்லை. 32

மூலம் முற்றுப் பெற்றது.




இனி, பாயிர வகையால் அமைந்த உதிரிப் பாடல்கள்
(பிற்சேர்க்கை)

குணம் குறி கடந்தான், திங்கள்
குழவிப் பூ முடி மேல் இட்டான்
வணங்கு மா முனிவர் தேவர்
அசுரரால் வழுத்தப் பட்டான்
குணங்களின் மகிமை உள்ளம்
கொள்ளும் நல் கவியில் கோத்தான்
கணங்களில் சிறந்த புட்ப
தந்தன், கார் இருளை நீத்தான். 33

துய்ய நல் சிந்தை அன்பில்
தோய்ந்து நாள் தோறும் இந்தச்
செய்ய நீள் சடையான் சீர்த்தித்
தோத்திரம் செப்பும் செம்மல்
வையம் நீடு ஆயுள், செல்வம்,
வளர் புகழ், மக்கள் பல்கி
உய்யவே வாழ்வான் இம்மை;
உருத்திரன் நிகர்வான் அம்மை. 34

மகேசனில் தெய்வம் இல்லை;
மகிமை மேல் துதியும் இல்லை;
அகோரத்தில் மனுவும், ஆசான்
அவன் மேல் தத்துவமும் இல்லை;




மிகா – தவம், தானம், தீர்த்தம்,
விச்சை, பல் வேள்வி, தீக்கை
பகாத் துதிப் படனச் செல்வப்
பதினாற்(று) ஓர் பங்கின் தூக்கை! 35&36

வரம்(பு) அறு கருணை வள்ளல்
உவப்பில் ஓர் வழுக்கல் உற்றான்;
நிரம்பிய துதியால் பின்னும்
நின்மலற்(கு) அடிமை பெற்றான்–
கரும்(பு) உறும் இன் சொல் பாவான்;
அரசு கந்தருவர்க்(கு) ஆவான்;
அரும்(பு) உறு முறுவல் பேரான்;
அன்பு கண்ணுதலுக்(கு) ஆரான். 37

வானமும் வீடும் காட்டும்
வானவர் குருவை வந்தித்(து)
ஆனபின், அகலாச் சிந்தை
அஞ்சலி கரங்கள் பந்தித்(து)
ஊனம் இல் துதிஇ(து) ஓதில்
உம்பரும் பணிய ஓங்கி
ஞானம் ஆர் நாதன் பக்கல்
நண்ணுவர் நவையின் நீங்கி. 38

ஒப்(பு) இலாத் தெய்வப் பாடல்
உள்ளத்தை உருக்க முற்றும்



செப்பினான் சிவனார் சீரே
சிறந்த கந்தருவன்; "பூசை
இப் பரி(சு) ஈசன் தாளுக்(கு)
இயற்ற வாக்(கு) இயலால் நன்றே,
அப் பரி(சு) அடியனேன் பால்
அரன் மகிழ்ந்தருள்க" என்றே. 39&40

அவ்வண்ணம் இவ் வண்ணம்(ம்) என்(று)
அறிந்திலேன் உன்னை, மேலோய்!
எவ் வண்ணம் உண்மை வண்ணம்,
ஏற்க என் வணக்கம் எல்லாம்!
உய் வண்ணம் ஒன்(று) இரண்டோ
ஒரு மூன்றோ ஓதும் சாது
பொய் வண்ணம் பொன்றிப் போற்றப்
புகும் சிவன் உலகின் மீது. 41&42

மலர் ஒளி நகையான் செவ்வாய்
மலர் வழிப் போந்த செந்தேன்
மல(ம்) முதல் களையும்; ஈசன்
மனத்தினுக்(கு) இனியது) ஆகும்;
நல மருந்(து) இதனை நாவில்,
நினைவினில், இல்லில் சேர்க்க
உல(கு) உயிர்க்(கு) இறைவன் நேர்ந்தே
உவப்(பு) உறும் அருள் கண் பார்க்க.

பிற்சேர்க்கை முற்றுப் பெற்றது.





## மொழி பெயர்த்தோன் தற்சிறப்புப் பாயிரம்

உயர்த்தும் எருத் துக்கொடியோன்
ஒண் மகிமைப் பாடல்
உயர் தமிழில் வேண்டும் என
உன்னிப் – பெயர்த்தான்
அருள், நந்தி பெற்ற திரு
ஐயாறு பெற்ற
'**இரமணன்**' போய்
அற்ற(து) இருள்.

திருச்சிற்றம்பலம்



## ॥ अथ श्री शिवमहिम्नस्तोत्रम् ॥

महिम्नः पारं ते परमविदुषो यद्यसदृशी

स्तुतिर्ब्रह्मादीनामपि तदवसन्नास्त्वयि गिरः ।

अथाऽवाच्यः सर्वः स्वमतिपरिणामावधि गृणन्

ममाप्येष स्तोत्रे हर निरपवादः परिकरः ॥ १॥

अतीतः पंथानं तव च महिमा वाङ्मनसयोः

अतद्व्यावृत्त्या यं चकितमभिधत्ते श्रुतिरपि ।

स कस्य स्तोतव्यः कतिविधगुणः कस्य विषयः

पदे त्वर्वाचीने पतति न मनः कस्य न वचः ॥ २॥

मधुस्फीता वाचः परमममृतं निर्मितवतः

तव ब्रह्मन् किं वागपि सुरगुरोर्विस्मयपदम् ।

मम त्वेतां वाणीं गुणकथनपुण्येन भवतः

पुनामीत्यर्थेऽस्मिन् पुरमथन बुद्धिर्व्यवसिता ॥ ३॥

तवैश्वर्यं यत्तज्जगदुदयरक्षाप्रलयकृत्

त्रयीवस्तु व्यस्तं तिसृषु गुणभिन्नासु तनुषु ।

अभव्यानामस्मिन् वरद रमणीयामरमणीं

विहन्तुं व्याक्रोशीं विदधत इहैके जडधियः ॥ ४॥

किमीहः किंकायः स खलु किमुपायस्त्रिभुवनं

किमाधारो धाता सृजति किमुपादान इति च ।





अतर्क्यैश्वर्ये त्वय्यनवसर दुःस्थो हतधियः

कुतर्कोऽयं कांश्चित् मुखरयति मोहाय जगतः ॥ ५॥

अजन्मानो लोकाः किमवयववन्तोऽपि जगतां

अधिष्ठातारं किं भवविधिरनादृत्य भवति ।

अनीशो वा कुर्याद् भुवनजनने कः परिकरो

यतो मन्दास्त्वां प्रत्यमरवर संशेरत इमे ॥ ६॥

त्रयी साङ्ख्यं योगः पशुपतिमतं वैष्णवमिति

प्रभिन्ने प्रस्थाने परमिदमदः पथ्यमिति च ।

रुचीनां वैचित्र्यादृजुकुटिल नानापथजुषां

नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥ ७॥

महोक्षः खट्वाङ्गं परशुरजिनं भस्म फणिनः

कपालं चेतीयत्तव वरद तन्त्रोपकरणम् ।

सुरास्तां तामृद्धिं दधति तु भवद्भ्रूप्रणिहितां

न हि स्वात्मारामं विषयमृगतृष्णा भ्रमयति ॥ ८॥

ध्रुवं कश्चित् सर्वं सकलमपरस्त्वध्रुवमिदं

परो ध्रौव्याऽध्रौव्ये जगति गदति व्यस्तविषये ।

समस्तेऽप्येतस्मिन् पुरमथन तैर्विस्मित इव

स्तुवन् जिह्रेमि त्वां न खलु ननु धृष्टा मुखरता ॥ ९॥



तवैश्वर्यं यत्नाद् यदुपरि विरिञ्चिर्हरिरधः

परिच्छेत्तुं यातावनिलमनलस्कन्धवपुषः ।

ततो भक्तिश्रद्धा-भरगुरु-गृणद्भ्यां गिरिश यत्

स्वयं तस्थे ताभ्यां तव किमनुवृत्तिर्न फलति ॥ १०॥

अयत्नादासाद्य त्रिभुवनमवैरव्यतिकरं

दशास्यो यद्बाहूनभृत-रणकण्डू-परवशान् ।

शिरःपद्मश्रेणी-रचितचरणाम्भोरुह-बलेः

स्थिरायास्त्वद्भक्तेस्त्रिपुरहर विस्फूर्जितमिदम् ॥ ११॥

अमुष्य त्वत्सेवा-समधिगतसारं भुजवनं

बलात् कैलासेऽपि त्वदधिवसतौ विक्रमयतः ।

अलभ्यापातालेऽप्यलसचलितांगुष्ठशिरसि

प्रतिष्ठा त्वय्यासीद् ध्रुवमुपचितो मुह्यति खलः ॥ १२॥

यदृद्धिं सुत्राम्णो वरद परमोच्चैरपि सतीं

अधश्चक्रे बाणः परिजनविधेयत्रिभुवनः ।

न तच्चित्रं तस्मिन् वरिवसितरि त्वच्चरणयोः

न कस्याप्युन्नत्यै भवति शिरसस्त्वय्यवनतिः ॥ १३॥

अकाण्ड-ब्रह्माण्ड-क्षयचकित-देवासुरकृपा

विधेयस्याऽऽसीद् यस्त्रिनयन विषं संहृतवतः ।

स कल्माषः कण्ठे तव न कुरुते न श्रियमहो

विकारोऽपि श्लाघ्यो भुवन-भय- भङ्ग- व्यसनिनः ॥ १४॥

असिद्धार्था नैव क्वचिदपि सदेवासुरनरे

निवर्तन्ते नित्यं जगति जयिनो यस्य विशिखाः ।

स पश्यन्नीश त्वामितरसुरसाधारणमभूत्

स्मरः स्मर्तव्यात्मा न हि वशिषु पथ्यः परिभवः ॥ १५॥

मही पादाघाताद् व्रजति सहसा संशयपदं

पदं विष्णोर्भ्राम्यद् भुज-परिघ-रुग्ण-ग्रह- गणम् ।

मुहुर्द्यौर्दौस्थ्यं यात्यनिभृत-जटा-ताडित-तटा

जगद्रक्षायै त्वं नटसि ननु वामैव विभुता ॥ १६॥

वियद्व्यापी तारा-गण-गुणित-फेनोद्गम-रुचिः

प्रवाहो वारां यः पृषतलघुदृष्टः शिरसि ते ।

जगद्द्वीपाकारं जलधिवलयं तेन कृतमिति

अनेनैवोन्नेयं धृतमहिम दिव्यं तव वपुः ॥ १७॥

रथः क्षोणी यन्ता शतधृतिरगेन्द्रो धनुरथो

रथाङ्गे चन्द्रार्कौ रथ-चरण-पाणिः शर इति ।

दिधक्षोस्ते कोऽयं त्रिपुरतृणमाडम्बर विधिः

विधेयैः क्रीडन्त्यो न खलु परतन्त्राः प्रभुधियः ॥ १८॥



हरिस्ते साहस्रं कमल बलिमाधाय पदयोः

यदेकोने तस्मिन् निजमुदहरन्नेत्रकमलम् ।

गतो भक्त्युद्रेकः परिणतिमसौ चक्रवपुषा

त्रयाणां रक्षायै त्रिपुरहर जागर्ति जगताम् ॥ १९॥

क्रतौ सुप्ते जाग्रत् त्वमसि फलयोगे क्रतुमतां

क्व कर्म प्रध्वस्तं फलति पुरुषाराधनमृते ।

अतस्त्वां सम्प्रेक्ष्य क्रतुषु फलदान-प्रतिभुवं

श्रुतौ श्रद्धां बध्वा दृढपरिकरः कर्मसु जनः ॥ २०॥

क्रियादक्षो दक्षः क्रतुपतिरधीशस्तनुभृतां

ऋषीणामार्त्विज्यं शरणद सदस्याः सुर-गणाः ।

क्रतुभ्रंशस्त्वत्तः क्रतुफल-विधान-व्यसनिनः

ध्रुवं कर्तुः श्रद्धा विधुरमभिचाराय हि मखाः ॥ २१॥

प्रजानाथं नाथ प्रसभमभिकं स्वां दुहितरं

गतं रोहिद् भूतां रिरमयिषुमृष्यस्य वपुषा ।

धनुष्पाणेर्यातं दिवमपि सपत्राकृतममुं

त्रसन्तं तेऽद्यापि त्यजति न मृगव्याधरभसः ॥ २२॥

स्वलावण्याशंसा धृतधनुषमह्नाय तृणवत्

पुरः प्लुष्टं दृष्ट्वा पुरमथन पुष्पायुधमपि ।



यदि स्त्रैणं देवी यमनिरत-देहार्ध-घटनात्

अवैति त्वामद्धा बत वरद मुग्धा युवतयः ॥ २३॥

श्मशानेष्वाक्रीडा स्मरहर पिशाचाः सहचराः

चिता-भस्मालेपः स्रगपि नृकरोटी-परिकरः ।

अमङ्गल्यं शीलं तव भवतु नामैवमखिलं

तथापि स्मर्तॄणां वरद परमं मङ्गलमसि ॥ २४॥

मनः प्रत्यक् चित्ते सविधमवधायात्त-मरुतः

प्रहृष्यद्रोमाणः प्रमद-सलिलोत्सङ्गित-दृशः ।

यदालोक्याह्लादं ह्रद इव निमज्यामृतमये

दधत्यन्तस्तत्त्वं किमपि यमिनस्तत् किल भवान् ॥ २५॥

त्वमर्कस्त्वं सोमस्त्वमसि पवनस्त्वं हुतवहः

त्वमापस्त्वं व्योम त्वमु धरणिरात्मा त्वमिति च ।

परिच्छिन्नामेवं त्वयि परिणता बिभ्रति गिरं

न विद्मस्तत्तत्त्वं वयमिह तु यत् त्वं न भवसि ॥ २६॥

त्रयीं तिस्रो वृत्तीस्त्रिभुवनमथो त्रीनपि सुरान्

अकाराद्यैर्वर्णैस्त्रिभिरभिदधत् तीर्णविकृति ।

तुरीयं ते धाम ध्वनिभिरवरुन्धानमणुभिः

समस्तं-व्यस्तं त्वां शरणद गृणात्योमिति पदम् ॥ २७॥



भवः शर्वो रुद्रः पशुपतिरथोग्रः सहमहान्

तथा भीमेशानाविति यदभिधानाष्टकमिदम् ।

अमुष्मिन् प्रत्येकं प्रविचरति देव श्रुतिरपि

प्रियायास्मैधाम्ने प्रणिहित-नमस्योऽस्मि भवते ॥ २८॥

नमो नेदिष्ठाय प्रियदव दविष्ठाय च नमः

नमः क्षोदिष्ठाय स्मरहर महिष्ठाय च नमः ।

नमो वर्षिष्ठाय त्रिनयन यविष्ठाय च नमः

नमः सर्वस्मै ते तदिदमतिसर्वाय च नमः ॥ २९॥

बहुल-रजसे विश्वोत्पत्तौ भवाय नमो नमः

प्रबल-तमसे तत् संहारे हराय नमो नमः ।

जन-सुखकृते सत्त्वोद्रिक्तौ मृडाय नमो नमः

प्रमहसि पदे निस्त्रैगुण्ये शिवाय नमो नमः ॥ ३०॥

कृश-परिणति-चेतः क्लेशवश्यं क्व चेदं

क्व च तव गुण-सीमोल्लङ्घिनी शश्वदृद्धिः ।

इति चकितममन्दीकृत्य मां भक्तिराधाद्

वरद चरणयोस्ते वाक्य-पुष्पोपहारम् ॥ ३१॥

असित-गिरि-समं स्यात् कज्जलं सिन्धु-पात्रे

सुर-तरुवर-शाखा लेखनी पत्रमुर्वी ।



लिखति यदि गृहीत्वा शारदा सर्वकालं

तदपि तव गुणानामीश पारं न याति ॥ ३२॥

असुर-सुर-मुनीन्द्रैरर्चितस्येन्दु-मौलेः

ग्रथित-गुणमहिम्नो निर्गुणस्येश्वरस्य ।

सकल-गण-वरिष्ठः पुष्पदन्ताभिधानः

रुचिरमलघुवृत्तैः स्तोत्रमेतच्चकार ॥ ३३॥

अहरहरनवद्यं धूर्जटेः स्तोत्रमेतत्

पठति परमभक्त्या शुद्ध-चित्तः पुमान् यः ।

स भवति शिवलोके रुद्रतुल्यस्तथाऽत्र

प्रचुरतर-धनायुः पुत्रवान् कीर्तिमांश्च ॥ ३४॥

महेशान्नापरो देवो महिम्नो नापरा स्तुतिः ।

अघोरान्नापरो मन्त्रो नास्ति तत्त्वं गुरोः परम् ॥ ३५॥

दीक्षा दानं तपस्तीर्थं ज्ञानं यागादिकाः क्रियाः ।

महिम्नस्तव पाठस्य कलां नार्हन्ति षोडशीम् ॥ ३६॥

कुसुमदशन-नामा सर्व-गन्धर्व-राजः

शशिधरवर-मौलेर्देवदेवस्य दासः ।

स खलु निज-महिम्नो भ्रष्ट एवास्य रोषात्

स्तवनमिदमकार्षीद् दिव्य-दिव्यं महिम्नः ॥ ३७॥



सुरगुरुमभिपूज्य स्वर्ग-मोक्षैक-हेतुं

पठति यदि मनुष्यः प्राञ्जलिर्नान्य-चेताः ।

व्रजति शिव-समीपं किन्नरैः स्तूयमानः

स्तवनमिदममोघं पुष्पदन्तप्रणीतम् ॥ ३८॥

आसमाप्तमिदं स्तोत्रं पुण्यं गन्धर्व-भाषितम् ।

अनौपम्यं मनोहारि सर्वमीश्वरवर्णनम् ॥ ३९॥

इत्येषा वाङ्मयी पूजा श्रीमच्छङ्कर-पादयोः ।

अर्पिता तेन देवेशः प्रीयतां मे सदाशिवः ॥ ४०॥

तव तत्त्वं न जानामि कीदृशोऽसि महेश्वर ।

यादृशोऽसि महादेव तादृशाय नमो नमः ॥ ४१॥

एककालं द्विकालं वा त्रिकालं यः पठेन्नरः ।

सर्वपाप-विनिर्मुक्तः शिव लोके महीयते ॥ ४२॥

श्री पुष्पदन्त-मुख-पङ्कज-निर्गतेन

स्तोत्रेण किल्बिष-हरेण हर-प्रियेण ।

कण्ठस्थितेन पठितेन समाहितेन

सुप्रीणितो भवति भूतपतिर्महेशः ॥ ४३॥

॥ इति श्री पुष्पदन्त विरचितं शिवमहिम्नः स्तोत्रं समाप्तम् ॥





## ॥ சுயூ ஸ்ரீ ஶிவஉஹிஜ்றெஸ்தாகுழ ॥

உஹிஜ்நஃ வாரஂ தெ வாரஉவிடுஷொ யஜுஸஜு்ஶ்
ஹஸ்துதிஸ்ரஹூஹுாஉீநாஉவி தஉவஸணாஸ்யி திரஃ ।
சுயாஃவாஜுஃ ஸவூஃ ஸ்ஹுகிவாிணாாஉாவயி ஶுணஙு
உாவெஷூ ஹெஸ்தாகு ஹர நிரவவாஉஃ வாிகரஃ ॥ க॥

சுதீதஃ வஂயாநஂ தவ ச உஹிஉா வாஜ்நஸயொஃ
சுதஜ்ஜாவஹ்தா யஂ சகிதஉஹியதெ ஶு்திரவி ।
ஸ கஸூ ஹெஸ்தாதவூஃ கதிவியஶுணஃ கஸூ விஷயஃ
வஜெ கூவதூாஉீநெ வததி ந உநஃ கஸூ ந வசஃ ॥ உ॥

உயுஸ்ஹீதா வாசஃ வாரஉஜுதஂ நிஉிதவதஃ
தவ ஸ்ரஹுஙு கிஂ வாமவி ஸுரஶுரொவிஹஸ்யவஉழ ।
உஉ கெவதாஂ வாணீஂ ஶுணகயநவுண்ணுந ஹவதஃ
வுநாஉீதூயெூஃஸ்ஙு வுரஉயந ஶுஜிவதூவஸிதா॥ங॥

தவெஶ்ஸ்யஂ யத்ஜ்ஜமஉுஉயாரக்ஷாவுஜயக்ஜு
குயீவஸ்து வூஸ்தஂ திஸ்ருஷு ஶுணஹிஸ்ராஸு தநுஷு ।
சுஹவூாநாஉஸ்ஙு வரஉ ரஉணீயாஉரஉணீஂ
விஹஞுஂ வூாகொராஶீஂ விஉயத ஐஹெகெ ஜஉயியஃ॥ச॥

கிஉீஹஃ கிஂகாயஃ ஸ வலு கிஜுவாயஸ்துிஶுவநஂ
கிஉாயாரொ யாதா ஸ்ஜதி கிஜுவாஉாந ஐதி ச ।
சுதகெூஶ்ஸ்யெூ கயூநவஸர உுஃஹெஸ்தா ஹதயியஃ
குதகெூாஃயஂ காஂஶகிக் ஜுவாரயதி ஜொஹாய ஜமதஃ॥ரு॥

சுஜநூாநொ ரொகாஃ கிஉவயவவஞொஃவி ஜமதாஂ
சுயிஷ்ராதாரஂ கிஂ ஹவவியிரநாஜுதூ ஹவதி ।
சுநீஶொ வா குயூாஉ் ஶுவநஜநநெ கஃ வாிகரொ
யதொ உநூாஸ்யாஂ வுதூஉரவர ஸஂஶெரத ஐஜெ ॥ சு॥



குயீ ஸாஜ்ஞ்ம் யொமஃ வஶுவதிஜதம் வெஷ்ணவஜிதி
வ்ரஹிஙெ வ்ரஹ்ஸாநெ வரஜிஉஜஉஃ வய்ரஜிதி வ ।
ரூசீநாம் வெசிக்ராஜ்ஜுகூடிய நாநாவயஜுஷாம்
ந்ரணாமெகொ மர்ஸ்ஜஸி வயஸாஜணூவ ஜவ ॥ எ॥

ஜஹொக்ஷஃ வட்வாஜ்ஜம் வரஶுரஜிநம் ஹஸ்ூ வணிநஃ
கவாலம் வெதீயதவ வரஉ தஜ்ஞாவகரணு ।
ஸுராஸ்ாம் தாஜ்ஜிம் உயதி தூ ஹவஜ்ூவ்ரணிஹிதாம்
ந ஹி ஸ்வாத்ாராரம் விஷயஜமத்ஷ்ணா ஹ்ஜயதி ॥ அ॥

ய்ருவம் கஶதிக ஸவூம் ஸகலஜவரஸ்ய்ருவஜிஉம்
வரொ ய்ளவ்ாஃய்ளவெ ஜமதி மஉதி வ்ஸ்துவிஷயெ ।
ஸஜஷ்ஃவ்ருதஸ்ிந் வுரஜயந தெவிூஹ்ித ஜவ
ஸ்துவந் ஜிஹ்ஜி கூம் ந வலு நநு ய்ஷ்டா ஜுவரதா॥கூ॥

தவெஶ்யூம் யத்நாஜ் யஉுவரி விரிஞிஹரிரயஃ
வரிஜ்ஜுத்தும் யாதாவநிலஜநலஸ்கஙவவுஷஃ ।
ததொ ஹக்திஶுகா-ஹரமுரு-ஜுணஜ்ஞ்ாம் மிரிஶ யக
ஸ்வயம் தஸ்ஜு தாஜ்ஞாம் தவ கிஜநுவ்திநூ வலதி ॥ கo॥

கயதாஉாஸாஜ் திஹுவநஜவெரவ்திகரம்
உஶாஜஸ்ா யஜ்ாஹூநஜத-ரணகண்ூ-வரவஶாந் ।
ஶிரஃவஜ்ஞெணீ-ரவிதவரணாஜொரூஹ-பயெஃ
ஸ்ிராயாஸ்ஜஜக்ெஸ்ூவுரஹர விஸ்ூஜிூதஜிஉு ॥ கக॥

கஜுஷ்ு கூஜ்லவா-ஸஜயிமதஸாரம் ஹுஜவநம்
பலாக கெலாஸெஃவி கூஉயிவஸதள விக்ஜயதஃ ।
கலஹ்ாவாதாலெஃவ்லஸவஙிதாம்ஜுஷ்ஶிரஸி
வ்ரதிஷ்டா கூய்ாஸீஜ் ய்ருவஜுவஙிதொ ஜுஹ்ாதி வலஃ॥கஉ॥

யஜ்ஜிம் ஸுத்ாஜ்ஜா வரஉ வரஜொஜ்ஜுரவி ஸதீம்
கயஶக்யெ பாணஃ வரிஜநவியெயதிஹுவநஃ ।

ந தச்சிகும் தஸ்நிந் வரிவஸிதரி கூச்சரணயொஃ
        ந கஸ்யாவ்யூ஡ஹைந்தெ ஹவதி ஶிரஸஹ்ஸ்யுவநதிஃ॥ கந॥

சுகாணூ-ஙுஹாணூ-க்ஷயசகித-஦ெவாஸுரகூவா
        வியெயஸ்யா஽஽ஸீச் யஸ்ஞிநயந விஷம் ஸஂஹூதவதஃ ।
ஸ கஷ்ாஷஃ கணெ தவ ந குருதெ ந ஶ்ரியமஹொ
        விகாரொ஽பி ஶ்லாவ்யொ ஹுவந-ஹய- ஹங்-வ்யஸநிநஃ॥கச॥

சுஸிஜாயடா நைவ க்வசிஉபி ஸ஦ெவாஸுரநரெ
        நிவதஂதெ நித்யஂ ஜமதி ஜயிநொ யஸ்ய விஶிவாஃ ।
ஸ வஶ்யநீஶ காமிதரஸுரஸாயாரணமஹுக்
        ஸ்மரஃ ஸ்மதஂவ்யாத்மா ந ஹி வஶிஷு வய்யஃ வரிஹவஃ ॥ கரு॥

மஹீ வாஉாவாதாச் வ்ரஜதி ஸஹஸா ஸஂஶயவ஦ஂ
        வ஦ஂ விஷ்ணொஞ்ாம்யச் ஹுஜ-வரிவ-ஙுஂ-ஙஹ- மணஂ।
஦ுஹுஉஷாளஉஷ்ஷ்யஂ யாத்யநிஹ்ருத-ஜடா-தாஜித-தடா
        ஜமஜ்க்ஷாயெ கூம் நடஸி நநு வாமெவ விஹுதா॥கசு॥

வியஞ்யாவீ தாரா-மண-ஙுணித-஫ெநொத்ம-ருசிஃ
        வ்ரவாஹொ வாராஂ யஃ வ்ருஷதலஹுஷ்டஃ ஶிரஸி தெ।
ஜமஜீவாகாரஂ ஜலயிவலயஂ தெந க்ருதமிதி
        சுநெநைவொந்நெயஂ ய்ருதமஹிம ஦ிவ்யஂ தவ வவுஃ ॥கள॥

ரயஃ க்ஷொணீ யந்தா ஶதய்ருதிரமெந்த்ரா யநுரயொ
        ரயாஜ்ஜெ சந்த்ராகடா ரய-சரண-வாணிஃ ஶர இதி ।
஦ியக்ஷொஸ்தெ கொ஽யஂ திவுரதணமாஜம்பர விபிஃ
        வியெயைஃ க்ரீஜந்த்யா ந வலு வரதந்த்ராஃ வ்ரஹுபியஃ॥கஅ॥

ஹரிஸ்தெ ஸாஹஸ்ரஂ கமல பலிமாயாய வ஦யொஃ
        யதெகொநெ தஸ்மிந் நிஜமுதஹரந்நெத்ரகமலம் ।
மதொ ஹக்த்யுத்ரெகஃ வரிணதிமஸௌ சக்ரவவுஷா
        த்ரயாணாஂ ரக்ஷாயெ திவுரஹர ஜாமதிடி ஜமதாம் ॥ ககூ॥





கூதள ஸுடிவது ஜாமுக் கூஜஸி வயயொமெ கூதுஜதாം

ஷ் கூஜ வுயவ்ஸூ வயதி வுஷாாாயநஜுதெ ।

சுதஸ்வாം ஸஷ்ேகூஷ் கூதுஷு வயஉாந-வுதிஸுவம்

ஶுதள ஶுஜாம் பயவா ஊஜவரிகூஃ கூஜஸு ஜநஃ॥உ௦॥

கிரியாஉகூஷா உகூஃ கூதுவுதிரயீமஹுநுஷுதாம்

ஜஷீணாஜாகவிஜும் மாணஉ ஸஉஸுாஃ ஸுா-மணாஃ ।

கூதுஷுமஸுூதஃ கூதுவய-வியாந-வுஸநிநஃ

யுுவம் கூதூஃ ஶுஜா வியுாஜனிசாாாய ஹி ஜவாஃ॥உக॥

வுஜாநாயம் நாய வுஸஜனிகும் ஷ்வாம் ஊுஹிதாம்

மதம் ரொஹிஃ ஹுதாம் ரிாஜயிஷுஜுஷுஸு வவுஷா ।

யநுஷ்ாணெயுாதம் ஶிவஜவி ஸவகுாகுதஜஜும்

குஸஞம் தெ௫ஊுாவி தூஜதி ந ஜுமவுாயாாஹஸஃ ॥ உஉ॥

ஷ்வாவணுாமம்ஸா யுதயநுஷஜஹாய தூணவக்

வுாஃ வ்ஷும் ஊஷ்ா வுாஜயந வுஷ்ாயுயஜவி ।

யஶி ஷெணம் ஜெவீ யஜநிாத-ஜெஹாயூ-வடநாக்

சுவெதி கூாஜஜா பத வாஉ ஜுஸா யுவதயஃ ॥ உந॥

மூமாநெஷ்ாகீஜா ஷுாஹா விமாசாஃ ஸஹசாாஃ

ஶிதா-ஹஸூாயெவஃ ஸுமவி நுகுரொடீ-வரிகூஃ ।

சுஜஜுமும் மீயம் தவ ஹவது நாஜெவஜவியம்

தயாவி ஷூதூணாம் வாஉ வாஜம் ஜஜுயஜஸி ॥ உச॥

ஜநஃ வுதுக் ஶிதெ ஸவியஜவயாயாத ஊாதஃ

வுஹுஷுஜொஜாணஃ வுஜஉ-ஸமிவொகஜித-ஊமஃ ।

யஉாவொகுாஷாஉம் ஹுஉ ஐவ நிஜஜுாஜுதஜயெ

உயதுஞஷ்க்ஷம் கிஜவி யஶிநஷுக் கிய ஹவாநு ॥ உரு॥

கூஜகூஷ்ஷம் ஷொஜஷ்ஜஸி வவநஷ்ஷம் ஹுதவஹஃ

கூஜாவஷ்ஷம் வுொஜ கூஜு யாணிமாது கூஶிதி ச ।

வரிக்ஷீணாசேவம் கூயி வரிணதா விஷுதி மிஶ்ஃ
ந விஜஸ்தத்க்ஷம் வயஉிஹ தூ யக்ஃ கூம் ந ஶவஹி ॥ உசு॥

குயீம் திஸெரா வூத்தீஷ்டிஶூவநசயோ தீநவி ஸூஶாநு
சுகாஶாஜெூவஶீணெூஸ்தூிஹிஶிஉயக் தீணூவிக்ஷுதி ।
தூரீயம் தெ யாச யூநிஹிஶவஶூஙாநசணூஹி:
ஸசஷ்டம் -வூஷ்டம் கூம் ஶரணஉ ஶுணாதெூாஉிதி வஉீ॥உஎ॥

ஶவ: ஶவெூா ரூஜ்: வஶூவதிஶயோஶு: ஸஹசஹாநு
தயா ஹீசெஶாநாவிதி யஉஹியாநாஷ்டகஉிஉீ ।
சுஉூஷ்டிநு வூதெூகம் வூவிசரதி ஜெவ ஶூதிஶவி
வுியாயாஸெூ யாஜெ வூணிஹித-நசஸெூா:ஸூி ஶவதெ॥உஅ॥

நஜொ நெஉிஷ்டாய வுியஉவ உவிஷ்டாய வ நச:
நச: கெூஷாஉிஷ்டாய ஸூரஹர சஹிஷ்டாய வ நச: ।
நஜொ வஷிஷ்டாய திநயந யவிஷ்டாய வ நச:
நச: ஸவஉெூ தெ தஉிஉசதிஸவூாய வ நச: ॥ உகூ॥

பஹூல-ரஜஸெ விசேூா த்தள ஶவாய நஜொ நச:
வூபல-தசஸெ தக் ஸஂஹாரெ ஹராய நஜொ நச: ।
ஜந-ஸூவக்ஷுதெ ஸத்தொஉிக்தள ஶூஶாய நஜொ நச:
வூசஹஸி வஜெ நிஸெூஶூணெூ ஶிவாய நஜொ நச: ॥ ௩௦॥

கூஶ-வரிணதி-செதஃ க்ஷெூஶவஶூம் க்ஷூ செஉம்
க்ஷூ வ தவ ஶுண-ஹீஜொஜூஹி ஶஶூஉூஹி: ।
இதி வகிதசசஜீக்ஷுதூ சாம் ஶக்திராயாஜீ
வரஉ வரணயொஸெூ வாகூ-வூஷ்டொவஹாரஉீ ॥ ௩க॥

சுஹித-மிரி-ஸசம் ஸூாக் கஜ்ஜலம் ஹிஙூ-வாசெ
ஸூர-தரூவர-ஶாவா ஜெவநீ வகுஉூவீூ ।
ஸிவதி யஉி ஶுஹீகூா ஶாரஉா ஸவூகாலம்
தஉவி தவ ஶுணாநாஜீஶ வாரம் ந யாதி ॥ ௩உ॥



சுஸாா-ஸாா-ஊநீடுெநாுஈவிபகஸொுநாு-ஊளலெஃ
ஙுயிக-ஶாணஉஹிெநா நிமாணஸொுஷுாஸு ।
ஸகுவ-மண-வஙிஷ்டிஃ வாஷூஉஜாஜியாநஃ
ாஉிாஉலவாவுத்தைஃ ஷொுாகுஜெகதுகாா ॥ நந॥

சுஹாாஹாாநவஉுஂ யாஜுடுெஃ ஷொுாகுஜெகக்ஷ
வஂகி வாாஉஙக்ஷுா ஶாஃ-வித்தஃ வாகாந் யஃ ।
ஸ ஙவதி ஶிவவொகெ ாஉுதாுாுஸ்துயாாுகு
வுஉாாகா-யநாயாஃ வாகுவாந் கீகிபகாஂஶுு ॥ நசு॥

உஹெஶாணாவமொ ஜெவொ உஹிெநா நாவாாா ஸூகிஃ ।
சுவொாாணாவமொ உஜுா நாஸ்தி கத்லூஂ ஶுொாஃ வாஃ ॥ நரு॥

ஊக்ஷா உாநஂ கவஸ்யூஂ ஜ்ஞாநஂ யாமாமுகாஃ கியாஃ ।
உஹிநஸ்துவ வாஂஸு கலாஂ நாஹுகி ஷொாஙஶீஃ ॥ நசு॥

காஸாஉஶந-நாஉா ஸவப-மஙவப-ாாஜஃ
ஶஶியாாவா-ஊளலெஜெபவஜெவஸு உாஸஃ ।
ஸ வலா நிஜ-உஹிெநா ஶஷ் ஷவாஸு மொஷாக்ஷ
ஸ்துவநமுஉகாஷீபு் முவு-முவுஂ உஹிநஃ ॥ நஎ॥

ஸாாஶாாஉிவாஜு ஸூமப-ஜொகெக்ஷக-ஷெகாஂ
வஂகி யமு உநாஷுஃ வுாஜியிநபாநு-ஜெகாஃ ।
வுஜகி ஶிவ-ஸீவஂ கிஙமொஃ ஸ்தூயாநஃ
ஸ்துவநமுஉஜொவஂ வாஷூஉஜவுணீகஃ ॥ நஅ॥

சூஸாவ்துமுஉஂ ஷொுாகுஂ வாணுஂ மஙவப-ஹாஷிகஃ ।
சுநளவாஉுஂ உநொஹாாி ஸவபீஷுாவணபநஃ ॥ நகூ॥
ஐதுஷா வாஜுயீ வாஜா ஶ்ரீஉத்துஜு-வாஉயொஃ ।
சுவிபகா கெந ஜெவெஶஃ வீயகாஂ ஜெ ஸஉாஶிவஃ ॥ சஂ॥

கவ கத்லூஂ ந ஜாநாமி கீஉுஶொாுஸி உஹெஷுா ।
யாஉுஶொாுஸி உஹாஜெவ காஉுஶாய நமொ நஃ ॥ சக॥

ஊகுகாஸம் ஃகாஸம் வா ஞிகாஸம் யஃ வடுணாஃ ।
ஸவாவாவ-விநிஃாுக்தஃ ஶிவ ஸொகெ ஊஹீயதெ ॥ ச௨॥

ஶ்ரீ வாஷ்பஃஜ-ஊவ-வஜ்ஜ-நிமாுதெந
ஸ்தொதுெண கில்பிஷ-ஹரெண ஹர-விுயெண ।
கண்ஶஷ்திதெந வரிதெந ஸஊாஹிதெந
ஸுவீணிதொ ஶவதி ஶூதவதிஃாுஸெஶஃ ॥ ச௩॥

॥ ஐதி ஶ்ரீ வாஷ்பஃஜ விரசிதம் ஶிவஊஹிந்நஃ
ஸ்தொகும் ஸஊாவுு ॥



